Regd M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு



மலர் 28 | மன்மத புரட்டாசி 1955 செப்டெம்பர் | இதழ் 9

## பிள்ளையார் சதுர்த்தி ஆயுதபூஜை

பத்திராசிரியர்

இவை ஆவணியிலும் புரட்டாசியிலும் வருவது வழக்கம். இவ்வாண்டில் இந்தியாவின் பல பகுதிகளிலும் இவை புரட்டாசியிலும் ஐப்பசியிலும் நடைபெறும். இதற்குக் காரணம் ஆவணி மாதத்தில் இரண்டு அமாவாசைகள் வருவதே. சில ஆண்டுகட்கு முன்பு "தமிழ் மக்கள் வேறு இந்தியமக்கள் வேறு" என்ற கிளர்ச்சி தோன்றியதன் விளைவாக, விரத நிர்ணயங்களிலும் குழப்பம் ஏற்பட்டுள்ளது பெரிதும் வருந்தத்தக்கது. இக்குழப்பத்தை நீக்குவது இன்றியமையாத பணியாகும்.

விநாயகப்பெருமான் அநாதிநித்யமான கடவுளாகவும் சிவபரம்பொருளின் மூத்த பிள்ளையாராகவும் இருப்பினும், தமிழ் நாட்டில் 1300 ஆண்டுகட்கு முன்னரே நுழைந்தனர். சிறுத்தொண்ட நாயனார் வாதாவித் தொன்னகரில் போர் புரிந்து வெற்றி பெற்று, அவ்வெற்றிக்கறிகுறியாக வாதாவி கணபதியை நமது தமிழ் நாட்டில் எழுந்தருளச் செய்து, வழிபடும் கடவுளருள் ஒருவராக்கினர். அதுவரையில் தமிழ் மக்களுக்கு விநாயகரைப் பற்றி ஒன்றுமே தெரியாது. தேவார முதலிகள் மூவர் காலத்துக்கு முந்திய திருவாசகம் திருக்கோவையார் திருக்குறள் தொல்காப்பியம் சங்க இலக்கியம் முதலியவற்றுள் விநாயகரைப் பற்றிய குறிப்பு எஃதுமில்லை. "பிடியதனுரு........கணபதி வர அருளினன்" எனும் தேவாரப் பாடலே விநாயகருக்குத் தமிழ் நூல்களுட் பிரவேசிக்கும் சிறப்பைத் தந்தது.

விநாயகரைப்பற்றித்தமிழ்மக்களுக்குள் பலவகையான கொள்கைகள் உண்டு. தமிழ் நாட்டுக்குள் புகுந்த கடவுளுக்கு வழிபாடு வேண்டாம் என நின்று, பல தலைமுறைகளாக நாடோறும் தமது இல்லங்களில் பிள்ளையார் பூசை செய்துவந்த சில குடும்பத்தினர், அப்பூசையை நிறுத்தி அவர் திருவுருவத்தையும் வெளியேற்றி விட்டனர். புகுந்த கடவுளாயினும், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பிள்ளையார் கோயில், ஒவ்வொரு பெரிய நகரத்திலும் தெருவுக்கொரு பிள்ளையார் கோயில், ஒவ்வொரு வீட்டிலும் பிள்ளையார் பூசை எனும் நிலையில் பிள்ளையார் தமிழ்மக்கள் மனத்தைக் கவர்ந்து விட்டார். தமிழர்கள் எதை எழுதினாலும் முதலில் பிள்ளையார் சுழி எழுதியே தொடங்குதல், எல்லா நூல்களுக்கும் பிள்ளையார் வணக்கமாகிய காப்புச் செய்யுள் எழுதுதல் முதலிய பழக்கங்களைக் காணலாம். வைணவராகிய வில்லிப்புத்தூராழ்வார் தமது பாரதத்திலும் "மருகார் மலர்த்தாம..." எனத்தொடங்கும் விநாயகர் வணக்கச் செய்யுளை எழுதி வைத்தார்.

விநாயகர் மகாராஷ்ட்ர மக்களுடைய குலதெய்வம். மகாராஷ்ட்ர மக்கள் வீடுகளில் அவர் சிறப்பிடம் பெற்று நித்யவாசம் செய்கிறார். நண்பர்கள் காணவந்தால், மகாராஷ்ட்ர மக்கள் தமது வீடுகளிலுள்ள விநாயகரைத் தரிசனம் செய்வித்த பிறகே, அவர்களிடம் வந்த காரியத்தைப் பற்றி விசாரிப்பது வழக்கம். மூன்றடி உயரம், பல பல வர்ணங்கள் தீட்டியன, பல நிலைகளில் உட்கார்ந்தும் சாய்ந்துகொண்டும் நின்றும் இருக்கிற மண்ணுருவங்கள் விநாயக சதுர்த்தியில் வாங்கப் பெற்று அடுத்த ஆண்டு விநாயக சதுர்த்தி வரையில் பூசிக்கப் பெற்று, பிறகு கடல், ஆறு, ஏரி, குளம் எனும் நீர்ப்பெருக்கேதேனும் ஒன்றில் சேர்க்கப்படுதல் அந்நாட்டவர் பழக்கம். மகாராஷ்ட்ரர் பழக்கத்தை யொட்டி இந்தியாவின் வேறு பல பாகங்களிலும் இவ்வாறே கொண்டாடப் பெறுகின்றது. "கணேஷ் சதுர்த்தி" என்று இந்தியா முழுமையும், பாத்ரபத சுக்ல சதுர்த்தி எனும் ஒரே நாளில்தான் எங்கணும் இவ்விழா நடைபெறும். பாத்ரபத சுக்ல சதுர்த்தியென்ற தொடர் மொழியினாலேதான் கருத்து வேறுபாடுகள் தோன்றுகின்றன. எக்காரணம் பற்றியோ, தமிழர்களையும் மலையாளத்

தினரையும் தவிர, வேறு இந்திய மக்களனைவரும் சாந்த்ர மானம் எனும் பஞ்சாங்க கணித முறையை மேற்கொண்டுள்ளனர். திராவிட மக்கட் கூட்டத்தினருள் ஒரு பெரும் பகுதியினராகிய தெலுங்கரும் கன்னர மக்களுங்கூட சாந்த்ரமானத்தையே ஒப்புக்கொண்டுள்ளனர். மலையாள நாட்டினர் சுத்தசௌரமானிகள். இவ்வாண்டிலும் (ஆவணி விரதங்கள் இரண்டுபட்ட நிலையிலும்) அவர்கட்குச் சிறந்த பெருவிழாவாகிய ஓணம் என்பது ஆவணித் திருவோணத் தன்றே (31—8—1955ல்) நடைபெற்றது. புரட்டாசித் திருவோணத்தை அவர்கள் கொள்ளவில்லை.

தமிழ் மக்கள் தங்கள் விரதங்களையும் விழாக்களையும் குருபூசை நாட்கள் முதலியவற்றையும், சௌரமானமாதத்தையும் நக்ஷத்திரத்தையும் ஒருப்படுத்தி நிர்ணயம் செய்து கொண்டாடுவது வழக்கம். தைப்பூசம், மாசிமகம், பங்குனி உத்திரம், சித்திரைச் சதயம், வைகாசிவிசாகம்மூலம், ஆனி மகம் உத்திரம், ஆடிசுவாதி, ஆவணிமூலம், புரட்டாசித் திருவோணம், ஐப்பசிசுவாதி, கார்த்திகைப்பெருங்கார்த்திகை, மார்கழித்திருவாதிரை என்பன காண்க. ஏனைய நாட்டுமக்கள் விரதங்களையும் விழாக்களையும், தமிழர்கள் மேற்கொண்டு அனுஷ்டிக்கும்போது, உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலே நலம் என்பதைக் கடைப்பிடித்து, அம்மக்கள் கொண்டாடும் நாட்களிலேயே தாங்களும் கொண்டாடினுர்கள். விரதங்களை மட்டும் மேற்கொண்டு, அவற்றை நிர்ணயித்தற்கு மட்டும் வேறு விதிகளை மேற்கொண்டு குழப்பம் விளைவிக்க அவர்கள் கனவிலும் எண்ணவில்லை.

இவ்வாறு மேற்கொள்ளப்பெற்ற விரதங்களுட் சில விநாயக சதுர்த்தியும நவராத்திரி ஆயுதபூஜையும். இவை இந்தியா முழுமையும் சாந்த்ரமான முறையில் நிர்ணயிக்கப் பட்டு வேற்றுமையின்றி கொண்டாடப்படுவன. இங்கு பாத்ரபதத்தை ஆவணியென்றும், ஆச்வீயுஜத்தைப் புரட்டாசியென்றும் கொள்வது பெருந்தவறு. ஆவணி புரட்டாசி எனும் சௌரமான மாதங்கட்கு வடமொழியில் சிம்ஹம், கன்யா என்ற பெயர்களுண்டு. இவ்விரதம் பற்றிக் கூறுகின்ற வடமொழி ஆகம புராண வாக்யங்கள் எல்லாம் சிம்ஹம், கன்யா எனக் குறிக்காமல், பாத்ரபதம், ஆச்வீயுஜம் எனக் குறித்துள்ளமை கூர்ந்து கவனித்தற்குரியது.

இதில் சைவர்கள் முறை, தமிழர்கள் முறை, சௌரமானிகள் முறையென்றெல்லாம் வீணாக குழப்பம் செய்தல் பெரிதும் வருந்தத் தக்கது.

விநாயகரை உடையுங்கள், கடவுள் வழிபாடு அறியாத மூடர் செயல் என்றெல்லாம் நாத்திகம்-பேசி நாத்தழும்பேறும் இக்காலத்தில், வழிபடுவோருக்குள் நாட்கள் பற்றிய குழப்பம் இருக்கவே கூடாது. விநாயகரை எந்நாளிலும் வழிபடலாம். 21—8—55ல் விநாயக சதுர்த்தியென்று நினைத்து வழிபட்டோர்கட்கு விநாயகர் "அருள் செய்ய மாட்டோம்" என்று மறுக்கமாட்டார். புரட்டாசியில் இந்தியாவிலுள்ள (ஒருசிலர் நீங்கலாக) எல்லோரும் வணங்கி வழிபடும்போதும் (மிகுதியான தொகையினர் வழிபாட்டினால் ஏற்படும்) வெள்ளமாகப் பெருக்கெடுத்தோடும் அருள் விளக்கத்தோடு நலம் பல புரிவார். இவ்வாறே அம்பிகையின் பேரருளும் ஐப்பசியில் வருகிற சுக்கில மஹா நவமியில் கடல்மடை திறந்தாற்போல நமக்கு நலம் செய்யும்.

தம்மையும் தம் அம்மையையும் வழிபடும் நாட்களிவை என்பதைக் கணக்கிடுவதில் குழப்பம் விளைவிக்காமல் காப்புக் கடவுளாகிய விநாயகர் நம்மைக் காப்பாராக.

---

## விரதங்களும் அதிகமாஸமும்

[ம. சுவாமிநாத சிவாசாரியார்]

நம்நாட்டில் அனுஷ்டிக்கப்படும் விரதங்களுள் விநாயக சதுர்த்தி, நவராத்திரி ஆயுதபூஜை என்பன முக்கியமானவைகள். இவைகள் முறையே ஆவணி, புரட்டாசி, மாதங்களில் வரும். ஆனால் சில வருஷங்களில் (ஒரே மாதத்தில் இரண்டு அமாவாசை வருகிற) அதிக மாதம் வருமேயாகில், மேற்கூறிய விரதங்களும் முறையே புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மாதங்களில் அனுஷ்டிக்கப்படவேண்டி வரும். இப்படி (மூன்று வருஷங்கட்கு ஒருமுறை)வரும் காலத்தில், இந்த விரதங்களை ஆவணி முதலாகச் செய்வதா, அல்லது புரட்டாசி முதலாகச் செய்வதா என்ற வினாக்கள் எழுகின்றன. சாஸ்திரங்கட்கும் அனுபவத்திற்கும் பொருந்து

கின்றது எப்படி என்பதை விசாரிப்பதே இந்த வியாஸத்தின் நோக்கமாகும்.

"சூரியன் மேஷம் முதலிய ராசிகளில் சஞ்சரிக்கிறதைக் கொண்டு கணக்கிடுகிற சௌரமான சித்திரை முதலிய மாதங்களிலேயே விரதங்களை அனுஷ்டிக்க வேண்டும். அதிக மாதமென்பது சௌரமானத்தில் ஏற்படாது. அது சாந்திரமானத்தில்தான் வரும். சாந்திரமானம் வடநாட்டாருக்கே உரியது. ஆகையால் விநாயக சதுர்த்தி முதலிய விரதங்களை ஆவணி முதலிய மாதங்களிலேயே செய்யவேண்டும்" என்று தென்னாட்டினர் சிலர் கூறுகின்றனர்கள். விரதங்கள் அநேகமாகப் புராணங்களின் பிரமாணங்களைக் கொண்டே ஏற்பட்டன. ஆகையால் புராணங்களைக் கொண்டே மேற்படி விரதங்களின் காலங்களை நிர்ணயித்தல்தான் முறையாகும். விநாயக விரதத்தைக் கூறும் புராணங்கள் சிலவற்றைப் பார்க்கலாம். வராஹ புராணத்தில் "பாத்ரசுக்ல சதுர்த்தியா பௌமேநார் கேணவாயுதா, மஹதீஸாத்ர விக்நேசம் அர்ச்சித்வேஷ்டம் லபேந்நர:"="பாத்ரபதசுக்ல சதுர்த்தியன்று விநாயகரைப் பூஜித்து இஷ்டங்களை அடைகிறான்" என்று கூறப்பட்டுள்ளது. ஸ்கந்த புராண உபதேச காண்டத்தில் "சதுர்த்தியாந்தவ்ருதம் புண்யம் ப்ரோஷ்டபங்மாஸிகேஸிதே=ப்ரோஷ்டபத மாத சுக்ல சதுர்த்தி விரதம் புண்ணியத்தை யளிப்பது" என்று கூறப்பட்டுள்ளது. பாத்ரபதம், புரோஷ்டபதம் என்பன சாந்திரமான மாதத்தையே குறிக்கும் சொற்களாகையால், விநாயக சதுர்த்தி விரதத்தை பாத்ரபதசுக்ல சதுர்த்தியில்தான் செய்யவேண்டும். ஆவணி எனும் சௌரமான மாதத்திற்கு வடமொழியில் சிம்ஹமாஸம் என்று பெயர். அப்பெயர் மேற்புராண வாக்கியங்களில் வராமை கவனிக்கத் தக்கது.

"தகப்பனார் சிராத்தம் வரின் அதிக மாதத்தை நாம் கொண்டாடுகிறோமா" என்று சிலர் கேட்கக்கூடும். "நிர்ணய ஸிந்து" எனும் தர்ம சாஸ்திரத்தில், சிராத்தாதிகளை ஸௌரமானமாகத்தான் செய்யவேண்டும் என்ற விதியிருப்பதால், அதை ஸௌரமானத்திலேயே செய்கிறோம். பவித்ரோத்ஸவ விதியில், விஷ்ணுவின் சயநம் அதிக மாதம் வரும்போது அடுத்த மாதத்தில்தான் ஏற்படுகிறது, அப்

போதுதான் பவித்ர உத்ஸவம் செய்யவேண்டும் என்றுள்ளது. சோமவார விரதம் ஆரம்பிப்பதற்கு "இரட்டிய தெரிசஞ் சேர்ந்த மலமதி ஒழித்து" என்று திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. மலமாதத்தில் மஹாளய சிராத்தம் செய்யக்கூடாதென ஸ்ம்ருதிகள் கூறுகின்றன. ஆகையால் அதிகமாஸம் அல்லது மலமாஸம் எனும் தோஷம் சௌரமானிகட்கும் உடன்பாடே.

விநாயக புராணத்தில் "பந்தமறும் ஆவணித் திங்கள் வளரும் சதுர்த்தி" என்றும், "சிங்கமா மதியிடைசேர் முன் பக்கத்துத் தங்கும் நம் சதுர்த்தி" என்றும் கூறப்பட்டுள்ளது, சாதாரணமாக ஆவணிமாதத்திலேயே பாத்ரபத சதுர்த்தி வருமாகையால்,சாமான்ய விதியாகக் கூறப்படுகிறதென்றே இதற்குப் பொருள்சொல்வதுதான் உசிதம். ஆகையினால் சாமான்யமாக விநாயகசதுர்த்தி விரதத்தை ஆவணி மாதம் சுக்லபக்ஷ சதுர்த்தியிலும், அதிகமாதம் வரும்போது மட்டும் புரட்டாசி சுக்ல சதுர்த்தியிலும் செய்வதுதான் சாஸ்திரங்கட்கும், சம்ப்ரதாயங்கட்கும் பொருத்தமாகும்,

இதுபோலவே, நவராத்ரியும், காமிகாகமத்தில் "ஆச்வயுக் சுக்லபக்ஷேவா அஷ்டமீமூலஸம்யுதா, ஸாமஹாநவமீ நாம்னாத்ரைலோக்யேதி ஸுதுர்லபா" (அதாவது ஆச்வயுஜ சுக்லபக்ஷ அஷ்டமியோடு கூடிய நவமி, மஹா நவமியெனப்படும். அது மூன்று லோகத்திலும் கிடைத்தற்கரியது) என்றுள்ளது. காரணாகமத்தில் "ஆச்வயுக் சுக்ல பக்ஷேது ப்ரதிமங் நவம்யந்தகே - ஆச்வயுஜ ப்ரதமை முதல் நவமி முடிவாக நவராத்திரி விரதம் அனுஷ்டிக்கவேண்டும்" என்றுள்ளது. பவிஷ்ய புராணத்தில் "அஷ்டம்யாஞ்ச நவம்யாஞ்ச ஜகன்மாதரம் அம்பிகாம், பூஜயித்வாச்வினே மாஸி விசோகோ ஜாயதே நர:" — ஆச்வயுஜ மாஸ அஷ்டமி நவமிகளில் அம்பிகையைப் பூஜித்துத் துக்கமற்றவனாக ஆகிறான்" என்று கூறப்பட்டுள்ளது. சென்ற சில வருஷங்கட்கு முன்பு ஏற்பட்டகிளர்ச்சி வேறுபாடு நிகழாத காலம் வரையில், சாந்த்ரமான ஆச்வயுஜ மாதத்திலேயே, நவராத்ரி பூஜை ஆயுத பூஜை செய்வது சாஸ்த்ரங்கட்கும் ஸம்ப்ரதாயங்கட்கும் அனுஷ்டானங்கட்கும் பொருத்தமாயிருந்தது.

———

# தேள் அணி

[ தணிகைமணி - வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A.]

சித்தாந்தம் மலர் 22-இதழ் 5-பக்கம் 168ல் (1949ஆு மேமீ இதழில்) "தேளும் ஓர் அணியா?" என்னும் தலைப் பில் தேவாரத் திருமுறைகளில் எங்கேனும் தேள் ஓர் அணி என்று கூறப்பட்டுள்ளதா என்னும் வினா எழுப்பப்பட்டது; தேவாரத் திருமுறைகளிற் காண்பதாகக் கிடைக்கவில்லை. ஆயினும் ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய திருப்புகழிற் சிவ பிரான் சடைமேலுள்ள பொருள்கள் கீழ்வருமாறு விளக் கப்பட்டுள.

"துத்திநச்சரா இளம்பிச்சி நொச்சி கூவிளம் சுக்கிலக் கலாமிர்தப் பிறைசூதம், சுத்தரத்தபாடலம் பொற்கடுக்கை ஏடலம் சுத்தசொற் பகிரதி......வேணியர்" (1935ல் வெளி வந்த சமாஜ திருப்புகழ் பதிப்பில் 817-ம் பாட்டு)

மேற்கூறியவற்றுள் "கடுக்கையேடலம்" என்பது கடுக்கையேடு - கொன்றை மலர், அலம் - தேள் (திவாகரம்) தேளின் பெயர்:—"தெறுக்கால் பறப்பன், தேளே விருச்சி கம் அலம் என்பெயரும் தேளின்மேற்றே" (சேந்தன் திவா கரம் – மனோன்மணி விலாச அச்சுக்கூடத்தில் 1917-ம் ஆு வெளியிட்ட பதிப்பில் பக்கம் 42-ல் காணலாம்.)

பதினேழு வயதுள்ள சேதுராமனார் என்னும் அருட்கவி, திருப்போரூர் ஆண்டவரால் ஆட்கொள்ளப் பெற்றவர். ஆசுகவியாக நூற்றுக்கணக்கான அருமை வாய்ந்த சந்தப் பாடல்கள் முதலிய பாடியுள்ளவர். 29—5—1955 தேதியில் திருவான்மியூர்ப் பெருமானைத் தரிசித்தபொழுது ஆசுகவி யாக ஒரு பதிகம் பாடினார்; அதில் பின்வரும் அழகிய பாட்டு ஒன்றிற் சிவனார் சடைமீது தேள் உலவுகின்றது என வந்துளது. அப்பாடல் பின் வருமாறு :—

"கீளுலாங் கோவணம் கீழரைக் கேயசைத் திட்டவன்
கோளுலாம் வேணிமேற் கோளராக் கூவிளங் கொண்டவன்
வாளுலாம் நீள்விழி மாதராள் பங்கினன் வான்மியூர்த்
தேளுலாஞ் செஞ்சடைத் தேசிகன் சேவடி சேர்மினே."

அன்பர்கள் இப்பாடலையும்கண்டு மகிழ்வார்களாக.

———

# கரும்பும் இரும்பும்

ஆர். பஞ்சநதம் பிள்ளை

இயற்கையில் கரும்பு மென்மையானது. இரும்பு வன்மையானது. ஆனால் மென்மை வன்மையாயிற்று, வன்மை மென்மையாயிற்று. கரும்பை வில்லாகக் கொண்டவன் மன்மதன். இரும்பினாலாகிய கோடரியைக் கொண்டவர் சண்டேசுரர். மன்மதன் செய்த செயல் தீமையாய் முடிந்தது. சண்டேசுரர் செய்த செயல் நன்மையாய் முடிந்தது. சிவபெருமான் யோகநிலையில் இருந்தபோது மன்மதன் பஞ்சமலர்களாகிய அம்புகளைப் பிரயோகித்துத் தவத்தைக் கலைக்க முயன்றான். முடிவில் சிவபிரானின் நெற்றிக்கண்ணால் நீறானான். இதை "காமனையன்று கண்ணாற் கனலெரியாக மூட்டி" என்று அப்பர் காட்டுகிறார். சண்டேசுரர் மணலால் ஓர் லிங்கம் அமைத்துப் பசுக்களின் மூலம் கிடைத்த பாற்குடங்களைக் கொண்டு அபிஷேகம் செய்யும்போது சண்டேசுரரின் தந்தை கோபத்தால் பாற்குடத்தை காலால் இடறவே, சண்டேசுரர் ஓர் கோலை எடுக்க அது மழுவாயிற்று, அதனால் தந்தையின் காலை வெட்டினார். சிவபெருமான் வெளிப்பட்டுக் காட்சிதந்து அவருக்குச் சண்டேசுரப் பதவி தந்து தம் குழுவில் சேர்த்துக் கொண்டார். அவர் பஞ்சமூர்த்திகளில் ஒருவராக விளங்குகிறார். சண்டேசுரர் தொண்டைப் பற்றிச் சுந்தரர் "மெய்ம்மையே திருமேனி வழிபடாநிற்க வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கடியேன்" என்று காட்டுகிறார்.

இவ்விருவர் வரலாறுகளைப் பார்க்கும்போது மன்மதன் புறத்தோற்றத்தில் மென்மையான மலர்களைப் போட்டாலும், அகத்தே தீய எண்ணங் கொண்டதால் அது தீமையாயிற்று. சண்டேசுரர் புறத்தோற்றத்தில் தந்தையின் காலை வெட்டுவதான கடுஞ்செயலாக இருந்தாலும், அகத்தில் பெருமானிடம் அன்பு கொண்டுள்ளதால் அது நன்மையாய் முடிந்தது. இதனால் அன்பினால் செய்யும் பாவகாரியமும் நன்மையாகும். அன்பில்லாதபோது நல்ல செயலும் தீமையாகமுடியும். இதைப்போலவே தக்கன்செய்த வேள்வியாகிய நற்செயலும் சிவபிரானை விலக்கிச் செய்தமையால் தீமையாக முடிந்தது. இதை சிவஞான சித்தியாரில்,

" அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறமதாகும்
பரனடிக் கன்பிலா தார் புண்ணியம் பாவமாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி
நர்ரீனிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே "

என்று ஆசிரியர் கூறுகிறார். இதில் நரரினிற்பாலன் என்பது சண்டேசுரரைக் குறிக்கும். இதனால் புறச் செயல்களைக் காட்டிலும் அன்பே பிரதானம் என்று தெரிகிறது. தற்போதுள்ள சட்டங்களிலும், குற்றச் செயல்களுக்காக மட்டுமல்லாமல் குற்றம் செய்யும்போது மனநிலைமைக்குத் தக்கபடியும் தண்டனை கொடுக்கப்படுகிறது.

சண்டேசுரரைப் போலவே மற்றோரடியார் சாக்கிய நாயனார் என்பவர் பரற் கற்களை எடுத்துப் பெருமான்மேல் போட்டு வந்தார். அகத்தில் அன்புடன் செய்ததால் கல்லும் மலர்போல் ஆகியது. மன்மதன் செயலில் மலரும் வன்செயலாக மாறியது. இதை சிவப்பிரகாசர் தாம் இயற்றிய நன்னெறியில் "ஈசற்கு நல்லோன் எறிசிலையோ ஒண் கருப்பு வில்லோன் மலரோ விருப்பு" என்று கேட்கிறார். (நல்லோன் - சாக்கியன்).

சொற்குறுதியப்பராகிய திருநாவுக்கரசர் தாம் பாடிய திருவாரூர்ப் பதிகத்தில் ஓர் பாடலில் கரும்புபிடித்த காமன் செயலையும், இரும்பு பிடித்த சண்டேசுரர் செயலையும் எடுத்துக் காட்டுகிறார். கரும்பு பிடித்த மன்மதன் சிவபிரானால் காயப்பட்டார் என்றும், இரும்பு பிடித்த சண்டேசுரர் அருள் செயப்பட்டார் என்றும் சுட்டிக்காட்டிப் பூ அரும்புகள் மலரும்படியான குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருவாரூர்ப் பெருமானிடம் வேண்டுகிறார்.

" கரும்பு பிடித்தவர் காயப்பட்டார் அங்கோர் கோடரியால்
இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார் இவர்கள் நிற்க
அரும்பவிழ் தண்பொழில் சூழணியாரூர் அமர்ந்த பெம்மான்
விரும்பு மனத்தினை யாதொன்று நானுன்னை வேண்டுவனே."

---

# பித்தர் பெருமை

[சுவாமி மதுரானந்தா, பி. ஏ.]

சுந்தரமூர்த்தி நாயனாரிடம், "என் பெயர் பித்தனென்றே பாடுவாய்" என்று ஆண்டவன் அடியெடுத்துக்

கொடுக்க, அடிகளும், "பித்தா" என்றே தொடங்கிப் பாடுகின்றார். பெருமானுக்குப், "பித்தன்" என்ற திருப்பெயர் சூட்டும் பெரிய வாய்ப்பும், சிறப்பும் தம்பிரான் தோழராகிய சுந்தரர் ஒருவருக்கே வந்தமைகின்றன. சுந்தரர் சரிதையின் இனிமையும், எளிமையும், பெருமையும் ஆண்டவனைப் "பித்தா" என அவர் அழைத்த ஒரு சொல்லிலே அடங்கிக் கிடக்கின்றன.

அந்த ஒரு சொல்லும் ஒப்பற்றத் தனிச் சொல்லாகவே விளங்குகின்றது. உன்னுந் தோறும் உன்னுந் தோறும் அதன் பொருள் ஆழ்ந்து அகன்று நுண்ணிதாய் நிற்கின்றது. அச் சொல் இறைவனது எண்பெருங் குணங்களாகிய "தன்வயத்தனாதல்" "பேரருளுடைமை" "வரம்பிலாற்றலுடைமை" "பேரறிவுடைமை" முதலியவற்றிற்கு இலக்கியமாய் வந்தமைந்திருப்பதைச் சற்றுச் சிந்தித்தால் உணரலாம். உயிர்களாகிய நம்மனோரது அன்பும், ஆற்றலும் அறிவும் வரம்புக்குட்பட்டன. குணப்பெருங் கடலாகிய இறைவனது அன்பும், ஆற்றலும் அறிவும் காலதேச காரணங்களாகிய வரம்புகளைக் கடந்துநிற்பவை. ஆதலால் பெருமானது திருவருட் செயலெல்லாம், நமது சுட்டறிவின் துணைகொண்டு நாம் வகுத்த "ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரங்களுக்குக் கட்டுப்படா." அது பற்றிப் பெருமான் செயல் பித்தன் செயலாகவே தென்படும்.

மணக்கோலங் கொண்ட திருநாவலூராருக்குத் திருவெண்ணெய்நல்லூரனை, "பித்தன்" என்று எவ்வாறு அழையாமல் இருக்கமுடியும்? "ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும், ஆதி மாண்பும் கேட்பான்புகில் அளவில்லை", என்ற திருவாக்கும் இவ்வுண்மையை எடுத்துக் காட்டுகின்றது. ஆதலால் பெருமான் பித்தனேதான்.

தடுத்தாட்கொண்ட புராணத்திலே, சேக்கிழார் பெருமான், "மெய்த்தாயினும் இனியானை, பித்தா பிறை சூடி", என நாவலூரர் பாடியதாகக் கூறுகின்றார். அதில் இறைவனது திருவுள்ளம் தாயுள்ளத்தினுஞ் சிறந்தது இனியது என்ற குறிப்பு வருகின்றது. ஆர். "பெற்றமனம் பித்து" என்பது பழமொழி. பிள்ளையின் பிழைகளைப் பார்த்துக் கடியாமல், பிள்ளை என்றும் இன்பமாய் வாழவேண்டுமென்று விரும்புகிறாள் தாய். அவளுடையவிருப்பம் முற்றுப்

பெறுவதில்லை. ஆனால் அருட்டாயோ அனாதியே மும்மலப் பிணிப்புண்டு எழுபிறவியில் கிடந்து எய்த்து நிற்கும், ஆன்மாவின் இடர் தீர்த்து இரவுபகலில்லாத பேரின்ப வீடருளுகின்றாள். அந்தப் பெருங்கருணைத் தாயை இடங்கொண்ட பெம்மானைப் பித்தனென்று சொல்லாமலிருக்க முடியுமா?

பித்துப் பிடித்த ஒருவனை கட்டுப்படுத்துவது முடியாத காரியம். அவன் சுதந்திரனாயிருக்க விரும்புவதை நாம் காண்கிறோம். சுந்தரரைச் சோதிக்கவந்த வேதியனும் சர்வதந்திர சுதந்திரன். தன்வயத்தன் ஆதலால் அவன் பித்தனே.

தன்னை யடைந்தார்கள், "யான் எனது" என்னுஞ் செருக்கை விடுவதற்காக, இந்தப்பித்தன் அவர்களை என்ன பாடு படுத்துகிறான்என்பதைப் பெரியபுராணத்தில் பரக்கக் காண்கிறோமல்லவா? அவன் செயல்களெல்லாம் உலகநீதிக்குக் கொஞ்சமாவது ஒவ்வுகிறதாபாருங்கள். எத்தனை பித்தலாட்டம், எத்தனை அபசாரம்? அயலவர் உடைமைகளையும், ஏன் தாரத்தையுங்கூடப் பறித்துக்கொள்கிறான். பிள்ளைக்கறி சமைக்கச் சொல்லுகிறான்! எத்தனை நல்லோர்களை மானபங்கப்படுத்துகிறான். இவையெல்லாம் பெரும் பித்தர் செய்வதன்றி மற்றையர் செய்வாரோ?

சமயத்தைப் பழிக்கும் சந்தேகப் பேர்வழிகளும் (Agnostics) பகுத்தறிவுவாதிகளும் (Rationalists) கூட, பரம்பொருளைப் பித்தலாட்டம் என்றுதானே பகர்கின்றார்கள். ஆம், அவர்கள் சொல்லுவதும் ஒருவாறு உண்மை போலத்தானே தோன்றுகிறது. இத்தனை ஏற்றத் தாழ்வையும் இன்ப துன்பங்களையும் கொண்ட முரணான உலகைப் படைத்த பொருள் முழுப் பித்தாகத் (blind force) தான் இருக்கமுடியும் என்று அவர்களும் சாதிக்கிறார்கள். ஆக ஆண்டவன் நல்லார்க்கும் அல்லார்க்கும் பித்தனாகவே தோற்றுகிறான். ஆதலால்தான் ஒருவர் இந்தப் பித்தனை "நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே" என்று பாடினார் போலும்.

இறுதியாக இந்தப் பித்தனை அண்டுகிறவர்களும் பெரும்பித்தர்களாகவே காணப்படுகிறார்கள். இனம் இனத்தோடு சேர்வது முறைதானே. உலக போகங்களையும் பந்துமித்திரர்களையும் உடைமைகளையும் ஏன் மோக்ஷத்தையுங் கூட மறந்து இந்தப் பித்தன் நினைவே பெரும் நினைவாக

ஊர்கள் தோறும் அலேகிறார்கள். அவர்களில் ஒரு பித்தர் கூறுவதைக் கேளுங்கள்.

"அப்பா உலகில் எல்லோரும் பைத்தியக்காரர்களே. மண்ணுக்கும் பெண்ணுக்கும் பொன்னுக்கும் பித்துப் பிடித்து அலேகிற கூட்டத்திலே கடவுள்மேல் பித்து யாருக்குப் பிடிக்கிறதோ அவன் பாக்கியசாலி" (பகவான் ஸ்ரீராம கிருஷ்ணர்) இத்தகைய பித்தர்கூட்டத்தின் பெருமையையே உலகெல்லாம் போற்றிப் புகழ்வதாக நாம் காண்கிறோம்.

"பித்தப் பெருமானுக்கு அடியேன், பித்தர் கூட்டத்திற்கு அடியேன்" என்று பாடிய சுந்தரர் குருபூசை நினைவுப் பிதற்றலாக இதை ஏற்றருள வேண்டுகிறேன்.

---

# பிரார்த்தனைப் பேறு

மா. ப. தியாகராஜன், பி. ஏ.

"ஆலயந் தொழுவது சாலவும் நன்று" என்ற முதுமொழியைப் பின்பற்றும் அன்பர்கள், ஆலயங்களுக்குச் சென்று வழிபடும்போது பலமுறையில் இறைவனைப் பிரார்த்திப்பதைக் காணலாம். வெள்ளிக்கிழமை தோறும் அம்மன் சந்நிதியில் ஏராளமாக அர்ச்சனைகள் நடப்பதைக் காணலாம். சனிக்கிழமைதோறும் சனிபகவான் சந்நிதியில் பலவழியில் பிரார்த்தனைகளைச் செலுத்துகின்றனர். அவ்வளவும் மனசாந்திக்காக மக்கள் செய்கின்றனர். நமக்கு ஏற்பட்ட ஒரு நன்மை இறைவனால் ஏற்பட்டது என்று எண்ணி நன்றி செலுத்தும் வகையில் அர்ச்சனை செய்வது நன்மையே. ஏதோ நன்மையை எதிர்நோக்கி இறைவனை அவ்விதம் விசேஷ தினங்களில் வழிபடுதல் சிறந்த மனப்பான்மையைக் காட்டாது. எனினும் முழு நம்பிக்கையுடன் அவ்விதம் செய்யினும் அது தெய்வ நம்பிக்கையை வளர்க்க ஏதுவாகும். எவ்விதத்திலேனும் இறைவனுடைய ஈடுபாடு இருத்தல் நல்லது என்ற முறையில் பிரார்த்தனைகள் எல்லாம் நன்மையைத் தரவல்லனவாகும். சிலர், அம்மன் சந்நிதியில் சிவபெருமானின் தோத்திரத்தையும், சுவாமி சந்நிதியில் அம்பாள் பாடல்களையும் பொருத்தமற்று தத்தமக்குத் தெரிந்த வகையில் பாடிக்கொண்டு ஆலயம் வலம் வருவதைக் காணலாம். ஆலய வழிபாடு செய்யவேண்டு

மென்ற எண்ணம் உதித்து ஆலயம் வலம் வருவது மிகவும் புண்ணிய வசத்தினால் ஏற்படக்கூடிய நலமாகும். அந்த நலத்தை, பிரார்த்தனை செய்வதின் தத்துவத்தை யறிந்து பயன்படுத்திக் கொள்வது நன்று. அதுவுமன்றி வீடுகளில் பாராயணமாகச் சில பாடல்களை அமைத்துக்கொள்வதிலும் சில விதிகளை அனுசரித்துச் செய்வது நல்லது.

நல்ல பழக்கவழக்கங்களும் குறிக்கோளில்லாது கடைப்பிடித்து ஒழுகுவோமாயின் கால அளவில் நழுவிப்போகும். ஒரு குறிக்கோளிருப்பின் அந்த பழக்க வழக்கங்களினால் நாம் முன்னேற்றமடைந்து வருகிறோமா என்று அவ்வப்போது நாம் தெரிந்துகொள்ள முடியும். இறைவனைப் பிரார்த்திப்பதையும் ஒரு பழக்கமாகப் பழக வேண்டும். பிரார்த்தனைப் பழக்கம் ஒரு சிறு செடிபோன்றது. தினம் தியானம் என்னும் நீர் பாய்ச்சி வளர்க்கவேண்டும். சந்தேக விபரீதங்கள் முதலிய விலங்குகளினின்றும் அதைப் பாதுகாக்கவேண்டும். இறைவன் நம்மை ஆதரிக்கக் கூடுமோ கூடாதோ என்ற சந்தேகம் எள்ளளவும் வேண்டியதில்லை. அவன் அருளை நினைந்து பிரார்த்திக்குங்கால் பற்றி இழுக்கும் விஷயப்பொருள்களாகிய விபரீத விலங்குகளையும் விரட்டி விடவேண்டும். சோம்பல் பிரார்த்தனைப் பழக்கத்தைக் கெடுக்கும், வைராக்கியம் என்னும் மருந்து கொண்டு அதை யழிக்க வேண்டும்.

"சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால் அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்று மாணிக்கவாசகர் கூறுவதற்கிணங்க நாம் பிரார்த்தனை செய்ய முற்படுவதே அவனருளாலேயாம். அவனருளால் பிரார்த்தனை எழுவதால் பிரார்த்தனையும் பலிதமாகும் என்பது திண்ணம். அவனுடைய பதிலை உணர, நாம் நம் மனதில் எழும் எண்ணங்களுக்கிடங் கொடுக்காமல் பதிலை எதிர்பார்த்த வண்ணம் ஏங்கி சும்மா இருத்தல் வேண்டும். "சிறைபெறு நீர்போல் சிந்தை வாய்ப்பாயும் சிவபுரத் தரசே" என்று மாணிக்கவாசகர் கூறுவதுபோல், அந்தநிலையில் அவனுடைய அருளை நினைந்து ஆனந்திப்பதே பிரார்த்தனையின் நோக்கமும் பயனுமாகும். நம் நினைவு சஞ்சலமுடையது. அது உணர்ந்துவதையோ, புரிவதையோ பற்றிக்கொண்டு வருத்தத்தை வளரவிடுவது அறியாமையாகும். பிரார்த்தனையின் மூலம்

சஞ்சல நினைவை ஒழித்து பரநினைவில் நம் மனதை ஈடு படுத்துவதால் சாந்தி ஏற்படுகிறது. மற்றும் அருள் வாக்கினால் நாம் பிரார்த்திப்பது நல்லது. வித்வத் திறமையினால் பாடிய பாடல்கள் கொண்டு பிரார்த்திப்பது உசிதமல்ல.

இறைவனைப் பிரார்த்தனை செய்யுங்கால் முக்கியமாக இறைவன் "தீதிலா நன்மை திருஅருட் குன்றென்றும்" "அருட்பெருஞ் ஜோதி தனிப்பெருங் கருணை யென்றும்" நாம் உறுதியாக நம்பவேண்டும். திருஞானசம்பந்த பரமாசாரியர் கூறுவதுபோல் "நன்றுடையானை தீயதிலானை... சென்றடையாத திருவுடையானை கூறவென்னுள்ளம் குளிரும்மே." பிரார்த்தனை செய்யுங்கால் உள்ளங் குளிர வேண்டும். பிரார்த்தனை செய்ய எண்ணம் வந்ததே அவனருளாலாகையால் நம் குறைபாடுகள் இனித் தோன்ற என்ற நம்பிக்கையும் கொள்ளல் வேண்டும். நம் நிலை நமக்குக் குறைபாடாகத் தோன்றுவது அறியாமையாலும் சஞ்சல மனத்தாலும் ஏற்படுவதாகும். எனவே பிரார்த்தனை மூலம் இறைவனின் கலியாண குணங்களையும் நிறைவையும் எண்ணிய பூரண நிலையில் மனதைத் தூய்மைப் படுத்துவோமாயின் அதன்வழி நம் குறைபாடுகள் நீங்கி நாமும் நிறைவை யெய்துவோம். இப்படி நன்மையைச் செய்; அப்படி நன்மையைச் செய் என்று இறைவனுக்கு நாம் வழி கற்பிக்க வேண்டுவதில்லை.

இந்ததத்துவத்திற்கிணங்க தோத்திரபாடல்களைப் பின் வருமாறு வகுத்துக்கொண்டு பயன்படுத்திக்கொள்வதுநலம்.

1. போற்றற் குரிய பாடல்கள்:—இறைவனுடைய பிரபாவங்களைக் கூறிப் புகழ்ந்து பாடுதல். "நெற்றிமேற் கண்ணினானே நீறுமெய் பூசினானே . . ...குற்றமில் குணத்தினானே கோடிகாவுடைய கோவே" முதலாகப் பத்துப் பாசுரங்களும், இறுதிப் பாசுரமும் "பழகநா னடிமை செய்வேன் பசுபதிபாவ நாசா.........குழகனே கோலமார்பா கோடிகாவுடைய கோவே" [நான்காந் திருமுறை - திருக்கோடிகா.]

2. தியானத்திற்கு முன் சங்கல்பம் செய்துகொள்ள உதவும் தோத்திரப் பாடல்கள் :—

"தேசனைத் தேசங்கள் தொழநின்ற திருமாலால்
பூசனைப் பூசனைகளு கப்பானைப் பூவின்கண்

வாசனை மலைநில நீர்தீவளி யாகாசமாம்
ஈசனை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே"

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

3. ஆட்கொள்ள வேண்டித் துதி செய்யும் பாடல்கள் :—

ஓம்பினேன் கூட்டைவாளா வுள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழைபோலக் கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின் வாய்த் தேரைபோலப் பலபல நினைக்கின்றேனை
ஓம்பி நீயுய்யக் கொள்ளா யொற்றியூருடைய கோவே

திருவினான் கொழுநனாருந் திசைமுகமுடைய கோவும்
இருவரு மெழுந்தும் வீழ்ந்தும் இணையடி காணமாட்டா
ஒருவனே யெம்பிரானே யுன்திருப் பாதங் காண்பான்
அருவனே யருள வேண்டு மதிகை வீரட்டனீரே.

4. பிரார்த்தனைப் பேற்றின் உறுதி :—

ஆழலுருவ மாகி யண்டமேழ் கடந்த வெந்தை
பேரொளி யுருவினானைப் பிரமனு மாலுங் காணாச்
சீரவை பரவியேத்திச் சென்றடி வணங்கு வார்க்குப்
பேரருளருளிச் செய்வார் பேணுமாப் பாடி யாரே.

5. குற்றம் நினைந்து விழைதல் :—"நிறைவிலேன் நேசமில்லேன் நினைவிலேன்...குற்றந் தீராய் கொன்றைசேர் சடையினானே" "கற்றதே லொன்றுமில்லை...அற்று நானலைந்து போனேனாரூர் மூலட்டனீரே."

6. உபதேசப்பாடல்கள் அல்லது நெஞ்சறிவுறுத்தல் :—"வேம்பினைப் பேசி விடக்கினை யோம்பி வினைபெருக்கி...தொண்டுபட் டுய்மின்களே" "வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்...கூத்தனுக் காட்பட் டிருப்பதன்றோ நந்தங் கூழமையே."

இவ்வாறு தேவாரத் திருப்பதிகங்களையும் திருமுறைகளையும் வகுத்துக்கொண்டு சமயத்திற்கேற்ப மனநிலைக்குத் தக்கவாறு பயன் படுத்திக் கொள்ளல் வேண்டும். கிறிஸ்தவ மதத்தினர் ஏசுநாதரை நினைந்து பிரார்த்தனை செய்து, நோயுற்றவர்களுக்கு நன்மையைச் செய்வதாகக் கேள்விப் படுகிறோம். சைவர்கள் அவ்வாறு நன்மையைச் செய்து

திருமுறைப் பாடல்களின் அருள் வாக்கின் உறுதியை யேன் உணரலாகாது?

இடுக்கொன்றுமின்றி யெஞ்சாமைபுன்பாத மிறைஞ்சுகின்றூர்க்
கடர்க்கின்றநோயை விலக்கு கண்டாயண்ட மெண்டிசையும்
சுடர்த்திங்கள்சூடிச் சுழல்கங்கையோடுஞ் சுரும்புதுன்றிப்
படர்கொண்ட செஞ்சடையா யெம்மையாளும் பசுபதியே.

என்று பிரார்த்தித்து நோயுள்ளவர்களுக்குத் திருநாவுக்கரசு சுவாமிகளை நினைந்து திருநீறிட அவருடைய வாக்குப் பொய்க்காது நோயுற்றவர் நலமடைவார். நமக்கேதாகிலும் இடுக்கணுற்றபோது,

இடுக்கண் பட்டிருக்கினு மிரந்தி யாரையும்......
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவா யவே

எனும் பாடலை மனனம் செய்வதோடு பஞ்சாக்கர ஜபம் செய்ய மன நடுக்கம் நீங்கி இடுக்கணும் விலகும். சிந்தையைக் கலக்கும்படியான சிக்கல்களும் திகைப்புக்களும் வாழ்க்கையிலேற்படுவது சகஜம். அப்போது தம்மை அவனடியானென வும் "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்" எனவும் நினைந்து

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்...
டுனமொன்றில்லா வொருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே

என்று பாடி மனனம்செய்ய எவ்வித கலக்கமும் தீரும்.

இவ்வாறாகப் பல முறையிலும் வாழ்க்கையில் நமக்குப் பயனளிக்க இறைவன் திருநாவுக்கரசு சுவாமிகளை புறச்சமயத்தினின்றும் மீட்டு ஆட்கொண்டு நம்மீது கொண்ட கருணையினால் அருள்பாலித்து அவர் மூலமும் மற்ற அடியார்கள் மூலமும் தேவாரத் திருப்பதிகங்களும் ஏனைய திருமுறைகளும் அளித்துள்ளார். வானம் வழங்கி வெள்ளம் கரை புரண்டோட அதைப் பராமுகப் படுத்தி தாகத்தினால் வருந்துவான் போல், சிவபெருமானது கருணை வெள்ளம் பன்னிரு திருமுறைகளில் தேங்கிக் கிடக்கின்றதைப் பொருட்படுத்தாது பிறப்பிறப் பென்னும் பேய்க்காற்றினால் மொத்துண்டும் அருளமுத வேட்கையின்றி வாழ்க்கை வரட்சியில் வருந்துவானேன்? இன்றே திருமுறைகளைப் படித்து மனனம் செய்து நலம்பெறப் பயன்படுத்தி மக்கள் அனைவரும் சைவ நெறியைப் பின்பற்ற வேண்டும்.

# நாலாயிரப்பிரபந்த விசாரம்

பாம்பன் ஸ்ரீமத் : குமரகுருதாச சுவாமிகள்

(மலர்–28 ; இதழ்–8 ; 288–ம் பக்கத் தொடர்ச்சி)

பாரதத்திற்கு முரணாத மொழிதருமிப் பாகவதம் வியாசப்ரோக்தமன்று ௧௮000 - கிரந்தமுள்ள தேவி பாகவதமே வியாசப்ரோக்தம். அச் சுகர்பாகவதமெனும் வைணவ லிகிதம் பொப்பதேவரெனும் ஒரு வடமொழிப் பண்டிதரால் செய்யப்பட்டதா மெனற்காய நியாயங்களை யெமது, வேதத்தைக் குறித்த ௯-வது வியாசம் விளக்குமாகலின் ஆங்குப் பரக்கக் காண்க. இப்பாகவதத்தில் அரனை யிழித்துக் கூறுஞ் சில கதைகளைபுண்மையென வெண்ணிப்பாடும் ஆழ்வார் பாடல்களிலும் மற்றைப் புராணங்களிலுமில்லாத பஸ்மாசுரனெனும் விருகாசுரன் கதையொன்றுளது. ஈதுள்ள அத்தியாயத்திற்கடுத்த ௮௯-வது அத்தியாயத்தில் மும்மூர்த்திகளிற் சத்துவகுண ஈசுரன் இன்னானெனப் பரீக்ஷை பண்ணி யறியச் சென்ற பிருகு முனிவர் எழுநாளளவும அரனும் உமையும் புணர்ந்து கொண்டிருத்தலைப் பின்பு ஞானக் கண்ணாலறிந்து அவ்விருவர்க்கும் பகலிங்கங்களறும்படி சாபங்கொடுத்துப் பிரமலோகம்புக்குப் பிரமனது செருக்கைக் கண்டிகழ்ந்து வைகுண்டம் போந்து தங்காலால் ஹரிதலையிலுதைத்தபோது கோபியாது புகழ்ந்து நின்ற அந்த ஹரியைச் சாத்துவிக சர்வேசுரனென அவரறிந்தாரென்று கூறு கதை யொன்றுளது. இவ்விரண்டு சிவதூஷணக் கதைகளும் கோபிகைகளாகிய பரதாரங்களை யிச்சித்து மானபங்கஞ் செய்து திரிந்த கிருஷ்ணமூர்த்தி சரித்திரங் கூறும் ௧௦-வது ஸ்கந்தத்தில் அவர்க்குச் சம்பந்தமில்லாதனவாகலானும், ஞானக்கண்ணுள்ள முனிவர் அக்கண்ணாலறியாமே பரீக்ஷை பண்ணியறியச் சென்றாரென்றல் இயைபின்மை யாகலானும் அவை அவ் விடைவந்த சுவடியி லிடைநுழைப்பாமென விவேகிகள் ஊகிக்கக்கிடக்கின்றன. மாயையின் குணமான சாத்துவிகத்தால் ஹரிக்குக் கடவுட்டன்மை தாபிக்கைக்கு முனிவரது காலுதைதையைத் தேடினமை—என் மனைவி விபசாரியானாலு மாகட்டும் விவேகமுள்ள பிள்ளை பிறக்கட்டும் என்பான் செய்கைக்கே

யொப்பிடத்தக்கது. ஆகலின் அக்கதைகளை யெழுதினோர் "பொய்யைச் சொல்லினும் பொருந்தச் சொல்லவேண்டும்" என்பதையு முணராராயினர். நிற்க அக்கூரேச விஜயத்தார் இடபமாய்த் தாங்கின கட்சியில் ஹரி இடபமாகி ஹரனைச் சுமந்ததை யொப்புக்கொண்டு அங்ஙனம் ஹரிக்கே மேன்மை கூறுவாராயினர். அவர் கூற்று—குதிரைமேலிருக்கும் பிரபுவை யிழித்துரைத்துக் குதிரைக்கு மேன்மை கூறுநர் கூற்றோ டொப்பிடத்தக்கது. அவ்விஜயத்து இராமலிங்க பூஜைக் கட்சியில் இராமர் அரக்கனாகிய இராவணனைக் கொன்றது பிரமஹத்தியாகாதென வெழுதப்பட்டுளது. அது, பலபுராணாதி நூல்கள் பகருமாறு வைணவர் பாகவதத்தும் ௬-வது ஸ்கந்தம் ௬-௯-௧௩-ம் அத்தியாயங்களில் பிராமணனான துவஷ்டாவுக்கும் தைத்தியனுடைய தங்கையான இரசனைக்கும் பிறந்த மூன்றுதலை விஸ்வரூபனை இந்திரன் கொன்று பிரமஹத்தியாற் பீடிக்கப்பட்டானென்பதையும், பின்றை அத் துவஷ்டா செய்த வேள்வியிற் றோன்றிய விருத்திராசுரனை அவ்விந்திரன் கொன்று பிரமஹத்தியாற் பீடிக்கப்பட்டானென்பதையும், அவ்விராவணன் மகரிஷியாகிய விசிரவசு வீரியத்திற் கேகசி வயிற்றிற் பிறந்தவனென்பதையும் அந்தப் பாகவதம் தசமஸ்கந்தம் எஅ-ம் அத்தியாயத்தில் "பிரசன்னமாக எதிர் நிற்கின்ற பிரஹ்மஹத்தி" என்பது காட்டுமிடத்தில் பலராமர் சூத்திர ஜாதியில் வந்த சூத முனிவரைக் கொன்றதனாலுற்ற பிரஹ்மஹத்தி நிவாரணமாக ஒரு வருடந் தீர்த்தயாத்திரை செய்தன ரென்பதையும் அறியாதெழுதிய தென்றும். அவ்விஜயத்து வியாசர் புயத்தம்பக் கட்சியில் "அனுமாரானவர் நந்தியைக் கோபித்துத் தம்முடைய இடது திருவடியாலே அவனுடைய முகத்தின் பேரில் உதைக்க அத்தாலே மேல்வாய்ப் பல்லுகளெல்லாம் உதிர்ந்துபோய் விட்டது." "இதற்குப் பிரமாணம் தேடவேண்டாமல் உலகத்தின்கண் பிரத்தியக்ஷமாய்க் காணலாயிருக்கும்" எனுஞ் சொற்களெழுதப்பட்டுள்ளன. இப்படியே, நானே பிரஹ்மமென் றகங்கரித்த விஷ்ணு அவதார புருஷரான குதிரைமுக அயக்கிரீவருடைய தலையின்

மீது அந்நந்திக் கடவுளுதைத்துக் கொம்புகளை வீழ்த்தியது காரணமாகக் குதிரை யெல்லாங் கொம்பிழந்து திரிதல் கண்கூடல்லவா ? அதனாலன்றோ "குதிரைக் குணமறிந்து தானே கொம்பு கொடுத்தானில்லை" எனும் பழமொழியு முண்டாயிருக்கின்ற தெனலும் பொருந்துமே யென்பதை அக் கட்சியார் உணராராயினர். இப்படிப் பல்வகையாலும் உறுதியற்றொழியுமிப் புத்தகத்தைக் குயிற்றிய கூரத்தாழ்வார் கங்கைகொண்ட சோழபுரத்திருந்த திருநீற்றுச்சோழபூபதியின் சமஸ்தான பண்டிதமணியாகிய வாகீசபாதசேகர சிவாசாரிய சுவாமிகளுடன் மதவிஷயமாக வாதித்துத் தோல்வியடைந்த விழியுமிழந்தவரென்றல் பிரசித்தமாயிருக்க, அவர் புத்தகத்திற்குக் கூரேசவிஜயமெனும் பெயரிட்டது வெள்ளரிப் பழத்திற்கு வெண்கலப்பூண் கட்டியதொக்கும். இதன் மறுப்பாகக் கூரேச விஜயபங்கமெனு நூலொன்றுளது. இருசமய விளக்கமெனுஞ் சிவதூஷணச் சுவடிக்கு இருசமய விளக்கத்தெளிவு, இருசமய விளக்கச் சூறாவளி முதலிய கண்டன நூல்களுமுள.

முடிச்சூர் அப்பாவு முதலியாரெனுமொரு வைணவர் சிவலிங்கம் ஆண்குறியும் பெண்குறியுமாமெனற்குப் புராண வசனமுண்டென்றும் இதனைத் தெய்வமாகக்கொண்ட மதம் லிங்கமதமென்றும் எள்ளி, லிங்கமத கண்டனமெனு மொரு புத்தகமெழுதி வெளியிட்டார். இவ்வித நிந்தை கூரேச விஜயத்திலுமுண்டு. இந்நிந்தகர், ருக்வேத சிவஜ் யோதியில் "ஸத்யம்பரம்பரமம்நித்யம்| ஓம்ஸத்யாந்தரிக்ஷம் ஓம்ஸத்யம்| ஓம்ஸத்யோஜாதம்| ஸச்சிதாநந்தமயைஸ்தாணு ரூபம்| தத்தேகரூபம்பூதோபவத்யாஸ்பதம்| ததைவலிங்காகாரம்ஜகதாதாரமித்வேவம்வேத:" எனவரு வசனங்கள் "ஆதியந்தமில்லாத நிச்சயப்பொருளான பரமொன்றிருந்தது. அதற்கிணை அதுவன்றி வேறில்லை. அஃது ஆதியந்த மத்தியரகிதமாம் பரவெளியான சத்தியமென்றும், யாதொரு பற்றுக்கோடு மில்லாத வஸ்துவினிடத்தில் ஆகாரந்தோன்றினது போல, தைவாதீனஸ்பத மானதற்கு இருப்பிடம் அந்தச் சத்தியத்திலுண்டான சத்தியமே

ஸ்தாணுரூபமென்றும், அந்த ரூபம் ஆதியந்தத்திற் சத்திய முளதென்றும், அதுவே ஒருருவென்றும், பூதங்களுக்கு மாத்ருஸ்தானமாயும் இலிங்காகாரமான சச்சிதாநந்த மய மாயும் ஜகதாதாரபூதமாயு மிருக்கிறதென்றும், பொருளாகு மென்பதையும், இப்படிப் பல பிரமாணங்க ளுண்டென்ப தையும், நாதபிந்து வடிவான ஓங்காரப் பிரகிருதியும் வான மும் பூமியுமாயுள்ள அண்டமும் அதுபோலமைந்த பிண்ட மும் இதயதாமரையில் அங்குஷ்ட அளவாயுள்ள கூடஸ்தனும் அந்தச் சிவலிங்காகாரமென்பதையும், வேதவசனங்களைப் புராணவசன மெவ்வாறு மறுக்குமென்பதையும், அப்புரா ணத்துள் சிவலிங்க நிந்தை விகிதஞ் சிவத்துவேஷிகள் சிருஷ்டியாமென்பதையும் "தவஸ்ரீயேமருதோமர்ஜயந்தேருத் ரயத்தேஜநிமசாருசித்ரம்| பதம்யத்விஷ்ணோருபமங்யதாயிதே நபாஸிகுஹ்பம்நாமகோநாம்" எனும் அந்த ருக்வேதஸம் ஹிதா வசனப்படி இலட்சுமி சமேதராகிய விஷ்ணு வென்பார் சிவலிங்கபூஜை செய்து பரமபதமெனும் வைகுண் டம் பெற்றுளாரென்பதையும் "தேவதேவஸ்த்யசிந்த்யாத்மா அஜய்யோவிஷ்ணுரவ்யய꞉| ஸர்வரூபம்பவம்ஜ்ஞாத்வாலிங் கேர்சயதிதம்ப்ரபும்|" எனுந் துரோணபர்வ வசனப்படி தேவர்களுக்குத் தெய்வமாய்ச் சிந்தனைக் கெட்டாத ஆத்ம பாவராய் உயர்வுடையவராய் விளங்கும் விஷ்ணுவாவார் சிவனுரைச் சர்வரூபியெனத் தெரிந்து மஹாப்பிரபுவாகிய அவரை இலிங்கத்தின்கட் பூஜிக்கின்றன ரென்பதையும், அப்படியே சைவ ஸ்கந்தாதி புராணங்களுஞ் சாலச்சாற்றுத லாற் சிவலிங்க நிந்தை விஷ்ணு நிந்தையுமாம். அதனைப் பூஜித்துப் பேறுபெற்ற மற்றைத்தேவர் முனிவர் முதலினோர் நிந்தையுமாமென்பதையுஞ் சிறிதுமறியாதவரானார். இந்நிந் தகர் கோபுரமாகிய தூலலிங்கத்தையும் பலிபீடமாகிய பத்திர லிங்கத்தையும், தைத்திரீயாருணசாகையில் "சிவலிங்காய நம꞉" என்றதன்பின் "ஆத்மாயநம꞉ ஆத்மலிங்காயநம꞉" என்றதையும் எந்த ஆண்குறி பெண்குறி யென்பாரோ வென்பது தெள்ளியோரே சிந்திக்கத்தக்கது. இவரது லிங்கமத கண்டனமறுப்பே பாஞ்சராத்திரமத சபேடிகை

யாகிய சைவ சூளாமணி யெனுமொரு பெருநூலாயுலகி லுலாவித் திரிகின்றது. எம்முடைய திருப்பா, காசியாத் திரை யெனுஞ் செய்யுள் நூல்களிலுஞ் சிவலிங்க வுண்மை சிவாநந் தாநுபூதியாமென விளக்கப்பட்டுளது. மேற் காட்டியபடி ஆபாசவாக்கியங்கொண்டு, சிவலிங்க நிந்தை செய்து திரியும் வைணவர் சீதாதேவி விடயமாக, "சித்திர கூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட" என்று பெரியாழ் வார் நெறிந்த கருங்குழற்பத்திற் (323) பகர்ந்துளது யாதா மென்பதையும், "வரிவிற்றடக்கை வயவேடன் - தொய்யின் முலைமேற் புல்லுதற்குத் தொடரத் துஞ்சாவருங் கற்பின் - மையன் முனிந்து நோக்குதலுஞ் சாம்பராயிற்றவனுடலே" என்றபடி தமயந்தியை யொருவேடன் மோகத்தாற்றீண்ட முயன்றபோது அவளது கற்புநோக்குத் தீயால் அவன துடம்பு சாம்பராயெரிந்தபடி அக்காக்கை யசுரனுமேனே வெரியவில்லையென்பதையும் யோசித்தனரா ? அவர் கும்பிடு நாராயணர்க்கும் இலக்குமிக்கும் ஆண்குறியும் பெண்குறியு மிருத்தலால் அவர்களையும் அப்படிப்பட்ட பல வாக்கியங் கொண்டு நிந்திக்குமாறு புராணக்கூட்டங்களிற் பல விடங் களில் தீட்டிவைத்தலும் புராணத்திற்கு உத்தரபாக முண் டாக்கலுஞ் சைவர்க்கு ஏலாதகாரிய மல்லவே. அவ்வா றவர்கள் செய்யாததொன்றே அவர்களுடைய பரமயோக் கியதையைக் காட்டப் போதுமானதென்பதூஉம் ஈண்டுண ரற்பாற்றே. நிற்க.

இராமதத்துவ தீபிகையெனும் புத்தகமெழுதிய ஒரு வைணவர் அப்புத்தகத்தில் இராமேசுவரத்தை உரோமேசு வரமென்றெழுதி அங்குள்ள இலிங்கத்தை உரோமலிங்க மென்று மாற்றிக்கொண்டனர். அங்ஙனம் ஈசுவரமும் இலிங்கமும் மாறுமல் இராமசப்தமே உரோமசப்தமாக மாறினமையின் யாதொரு பிரமாணமுமில்லாமல் இப்படி யெழுது நிந்தையாய தூர்க்கந்தங்கெட்டுக் கனசைவ மணம் கமகமவெனக் கமழ்கின்றதைக் கருத்துளார் கண்டு மகிழ்வரே. அப்புத்தகமறுப்பாகிய இராமதத்துவ தீபிகை யினது ஆபாச விளக்கமெனும் ஒரு பெருநூலில் மேலே

காட்டுற்ற விடயஞ் செவ்வனே சிங்காரிக்கப்பட்டுளது. அதில் வைணவம் நனி நறுக்கப்பட்டது. திருவரங்கக் கலம்பகம் சுக-வது பாட்டில் "வெற்பாவி * * * * பணிப்பாய் சுமக்கும்" எனுஞ் சொற்க ளுபயோகிக்கப்பட்டன. வெள்ளி(மலை) வெற்பிலிருப்பவரை நாம் வெற்பாவியென்றக்கால் மற்றவர் வைகுண்டமெனு மோரூரிலிருப்பவரை மண்ணாவியென்னாரோ வென்பதையும், வேங்கட வெற்புறை நாராயணரும் வெற்பாவியாவரே என்பதையும், பணியெனும் பாம்பைச் சிவனாரணிதல் கொண்டு அவரை நாராயணர் படுக்கும் பாம்பான பாயைச்சுமக்கும் ஆவியெனும் பொருடரு சொற்களை நாம் சொன்னால் மற்றவர் கிருஷ்ணர் மண்ணுண்டல் கொண்டு அவரைச் சோமசுந்தரத்தினது மலர்க்சரக்கூடையி லொட்டிய மண்ணைத்தின்னும் ஆவியெனும் பொருடரு சொற்களைச் சொல்லாரோ வென்பதையும், அக்கலம்பகஞ் செய்தார் உணராராயினர். இங்கே வைணவர், கிருஷ்ணருண்ட மண் அக்கூடை மண்தானே வெனக் கடாயின், சைவர் அரனாரணிந்த பாம்பு அப் பாய்ப் பாம்புதானே வெனவுங் கடாவுவார். நிற்க.

பிரமாண்ட புராணத்தில் க்ஷேத்திர கண்டத்தின் ஓர் பிரிவில் சித்திரகூட மான்மியஞ் சொலப்பட்டதாகவும், அதுவே சித்திரகூட புராணமெனப் பாடப்பட்டதாகவுஞ் சிவதூஷண வைணவர் செப்பி வாசிக்கும் அப்புராணத்து சச-ம் படலத்தில் "மூன்றென்றேது மாயிரத்தவர்" எனவும், "முத்தர்மா வைணவரவர்" எனவும் வருபவை தில்லை வேதியர் மூவாயிரவரையுங் குறிக்கின்றன. அவர்கள் பரம்பரையில் வருமனைவருஞ் சிவசின்ன தாரணராய்ச் சிவார்ச்சனை செய்யுஞ் சிவோபாசகராய்த் தில்லையிற் செறிந்து வாழ்பவராயுளா ரென்றதற்கு இஞ்ஞான்றங்குள்ளாரே சாக்ஷியாவர். இப்படிப்பட்ட அநுபவத்திற்குஞ் சுருதிகட்கும் மாறுகோளாக வேற்பட்ட யாதொரு புத்தகம் நவீனமெனற்கு அவ்வேதியர் "சிறந்த வூர்த்துவ புண்டரஞ் சேர்ந்த பன்னிரண்டார்" என அப்படலத்து வருவதுந் தகு சாக்ஷியாம். இங்கே, முன் வைணவராயிருந்த அம்மூவா

யிரவருமே பின் சைவராய் மாறியிருக்க வேண்டுமென்னின், அங்ஙனம் வைணவத்திற் பசையில்லை யென்றும். அற்றன்று; வைணவர் மூவாயிரவருந் தில்லையைவிட்டு வேற்றிடஞ் சென்றவராக வேண்டுமென்னின், அப்புராணப்படி சுவேதத்தீவிலிருந்து விஷ்ணு மூர்த்தியோடு வந்த அன்னோர் அவ்விஷ்ணு அர்ச்சனைத்தொழில் விட்டேகல் கூடாதென்பதனாலும், சைவ மூவாயிரவர் யாவரோ வென்னுங் கேள்விக்கு விடை யிறுக்கும் வகை ஆண்டில்லாததனாலும் அதுவும் பொருந்தாது. சொற்ற சித்திர கூடமெனும் பெயர் தர்சனோபநிஷத்து "சிதம்பரந்துஹ்ருந்மத்யே" என்றபடி இருதய சிதாகாசமெனுஞ் சிதம்பரப்பெயரினின்றுஞ் சிறப்புடையதன்று. என்னை? அங்கு வீழ்ந்து விழிமூடித் துயிலும் ஸ்ரீ கோவிந்தராஜரது கோயில் சிறுமையடைந்திருத்தலே சான்றாகுமாகலின். சிதாகாசத்தின் மிக்க கோயில் விளம் பொண்ணாதாகலின், "சித்ரகூடம் பெரிய கோயில்" என்னாது "திருவரங்கம் பெரிய கோயில்" என வைணவர் சொல்லுதலு மியைபின்மையுற்றுச் சித்திரகூடத்தைச் சிறிதாக்கிற்றென்பதூஉம் ஈண்டுணரற்பாலதே. அரங்கமென்பது நாடகசாலையெனும் பொருள் பயக்கும். அதில் நாராயணர் நட்டுவராகித் திருவாகிய இலக்குமியை ஆட்டுவித்துச் சம்புகேசுவரரை யுவப்பித்தது காரணமாக அது திருவரங்கமெனும் பெயர்பெற்ற விவரம் பழநூற் பிரசித்தமென்பது (சிவனுங் காளியும் ஆடுகின்ற கூத்தை கோவிந்தராஜர் பார்த்தார் என்று பிதற்றும்) அக்கூடப்புராண வைணவர்க்கு வயிற்றெரிவை யுண்டாக்கும்போலும். ஸ்ரீ கோவிந்தராஜர் ஸ்ரீ சிதம்பரேசுரரைக் கும்பிட்டும் குணப்பட்ட விவரம் எந்தப் பொருளுங் கந்த புராணத்திலெனும் பெருமைவாய்ந்த ஸ்காந்தத்துச் சூதசங்கிதையில் அத்தியாய வொழுங்காக வுண்டு. ஆதிசங்கராச்சாரியர், தங்கருத்திற் கியைந்தவாறு வேதபாஷியஞ் செயற்கு இது வழியாமென்று கஅ முறை படித்துணருமேம்பாடு பெற்று நின்றது அச்சூதசங்கிதையேயாம். சிதம்பரமாஞ் சிதாகாசரகசியஞ் சிவயோகிக ளுணரத்தக்கதென்பது முதலியவற்றை எமது

தகராலய ரகசியச் செய்யுள்களு மினிது விளக்குமல்லவோ? அத்தகைய சிதம்பரமெனுஞ் சொல்லைச் சொல்ல நாணும் வைணவர் சிதர்பரத்திற்கனுப்பவேண்டிய யாதானுமோ ரெழுத்து மடிப்பின் மேலே சித்திரகூடமென வெழுதி அதைத் தபாலிற் .சேர்ப்பாரோ ? சேர்ப்பினும் அஃதத் தலத்தையடையுமோ? இப்படியே சிவநிலையமாகிய திருவண் ணுமலையைச் சுதரிசனகிரியென்று அவ் வைணவர் சொல்லித் திரிவதுமாம். அன்னணஞ் சொல்லச் சயமுனி பாரதமுண் டெனவுஞ் சாற்றுவர். அதிலவ்வா றிருப்பினும் அது வியாச வசனங்களுக்கு விரோதமாகலின் பிரமாணமாகாது. வேத விரோதமாம். திருவண்ணுமலையைப் பிரமனுேடரி தேடி யலுத்த விஷயம் வைணவத்தைப் பாதாளத்திலமிழ்த்துகின்ற பைப்பலாத சுருதியில் சிவனுரது பாத தாமரையை விஷ்ணு வென்பார் தேடுந்தகையினரெனும் பொருளைத்தரூஉம் " யத்பாதாம்போருஹத்வம்த்வம்ம்ருக்யதேவிஷ்ணுநாதுநா " எனும் வசனத்தானும், ருக்வேத ஸம்ஹிதையில் விஷ்ணு வென்பார் வராகமாகிப் பூமியைக் கிழித்துச் செல்லுங்கால் ஆயிரவருடங்களாயின, சிவனுரது பாதத்தைத் தேடுவதில் அவாவுடையவவர் தாயுநீர், தந்தையுநீர், உடன்பிறந்தாருநீர், மூத்தாருநீர், உயர்ந்தாரு நீரென்று துதித்தனர் : இம் மகிமையையறிய வல்லானெவனே அவனே காண்கின்றவ னுகின்றுன், அறிந்தவனுகின்றுன், கர்த்தாவாகின்றுன், காரியஞ் செய்கின்றவனுகின்றுன், இவ்விதமறிய வல்லா னெவனே அவன் சிவசாயுஜ்யத்தை யடைகின்றுன் சிவசா யுஜ்யத்தை யடைகின்றுனெனும் பொருளைத் தரூஉம் " விஷ்ணுர்வேவராஹரூபமாஸ்தாயபூமிம்விதாரயன்ஸஹஸ்ரம் ஸமாஆஸந், பாதாந்வேஷணபரோபூத்வா, த்வமேவமா தாஸி, த்வமேவபிதாஸி, த்வமேவப்ராதாஸி, த்வமேவ ஜ்யேஷ்டோஸி, த்வமேவஸ்ரேஷ்டோஸி, யஏவம்பஹிமாநம், வேதாத்ருஷ்டாபவதி, விஜ்ஞாதாபவதி, கர்தாபவதி, காரயி தாபவதியஏவம்வேதா, சிவஸாயுஜ்யமாப்நோதிசிவஸாயுஜ்ய மாப்நோதி " எனும் வசனத்தானும் இனிது பெறப் படுவதால் மேற்போந்த சபேடிகைக்காரரும் அதனை மறுக்

கும் வழியின்றி மாயாநாராயணன் கதையெனக் கரைந்ததையுமேலே விளக்கினும். நிற்க, சிவனே பரம்பொருளென விஷ்ணுவாவார் பூஜித்துப் புகழ்பெற்ற செய்தி பாத்மத்திற் பெரிதும் பேசப்பட்டுளது. அதற்கு மாறுக அந்தச் சிவனை யிழித்துக்கூறும் பாத்மோத்தர மெனுமொரு புத்தகம் வைணவர் வைத்திருக்கின்றனர். பூர்வபாகத்தைச் செய்த வியாசமாமுனிவர் அதற்கு முரணாக உத்தரபாகத்தைச் செய்தாரென்றால் அம்முனிவரன்றோ முழுமூடராக வேண்டும். அஃதமையாது. பூர்வமில்லாமே உத்தரமென்பதொன்று உறுதியாதற் கேதுவுமில்லை. ஆதலால், அவ்வுத்தரபாகஞ் சிவத்துவேஷிகளா லுண்டாக்கப்பட்ட தென்பதே யமைவுடைத்து. இப்படியே சிவநிந்தை செய்வான் சில புராணங்கட்கு உத்தரபாகங் கற்பிக்கை யுண்டெனற்குச் சிவபரத்துவங் கூறும் இலக்ஷங்கிரந்தங் கொண்ட ஸ்காந்தத்திற்கு முரணாகக் "குத்திரயகலிச் சித்திரகூடக் குவலினைக் காந்தவுத் தரத்தும்" என்று அச்சித்திரகூடப் புராணப் பாயிரத்தில் வருவித்ததே காட்டாகும்.

ஈசாவாஸ்யாதி பத்துபநிஷத்துக்கும் இராமாநுஜர் செய்யும் அருத்தத்தை அவர் சீடர் கூரத்தாழ்வார் எழுதிக்கொண்டு வருகையில் ஆசிரியர் தவறான அருத்தஞ் செய்தலை அச்சீடரறிந்து அப்படி நானெழுதேனென்றவுடன் அவரை முனிந்து தள்ளிய அவ்விராமாநுஜர் பின்பு சீடர் சொன்னதே சரியெனத் தேர்ந்து அவரபிப்பிராயப்படி யெழுதுவித்தாரெனுஞ் செய்தி குருபரம்பராப்பிரபாவம் இளையாழ்வார் வைபவத்திலுண்டு. இவ்வாறு முடிந்த பாஷியம் சிற்றறிவுகொண்டு தெரிந்தமட்டு மெழுதியதென்பதிற் சிறுவரையு மையமில்லை. அன்றியும், கலியுகம் ௩0௫அ-ல் பிறந்திருந்த ஆதிசங்காராசாரியர் சரித்திரத்திலும் நீலகண்ட சிவாசாரியர் சரித்திரத்திலு முள்ளபடி அச்சங்கராசாரியர் காலத்தில் வயோதிகராயிருந்த அந்த நீலகண்ட சிவாசாரியர் செய்த சைவ பாஷியத்திலுள்ள விசிட்டாத்துவித சப்தத்தையே கலியுகம் ௪௧௧அ-ல் பிறந்திருந்தவரெனப்படும் இந்த இராமாநுஜர் கிரகித்தவராகித் தமது புத்தகம் விசிட்டாத்

துவித பாஷியமெனுமா றெழுதிவைத்ததும், அந்த நீலகண்ட பாஷியப்பொருளை பாஞ்சராத்திரபரமாக அவ்விராமாநுஜ ரெழுதியிருப்பதும் அவ்விரண்டனையும் படித்த பண்டித ரறிந்தவைகளே யாகலின் அவ்விராமாநுஜ பாஷியமொரு தனிபாஷியமாகவுமாட்டாது. இப்படிப்பட்டதையே "ஸ்ரீ பாஷியம், ஸ்ரீபாஷியம்" என்று சில வைணவர் கொண்டாடு கின்றார். இவ்வுண்மையுணர்ந்த நல்லூழ் வைணவர் பலரும் இதனை நம்புதல் இருட்டறையில் மலடுகறந் தெய்த்ததாகு மென்று வைதிக சைவம் புகுந்தனரென்றல் இவ்வுலகறிந்த செய்தியே. நிற்க, கச்சி மல்லை மயிலையெனு மூர்களிலுதித்த பொய்கையார், பூதர், பேயாரெனு மூன்றாழ்வாருந் துவாபர யுகம் அ௬0௯00-ல் பொருந்திய சித்தார்த்தி வருஷம் பிறந் தார்களென்று கூரேச விஜயங் கூறுமென்பதைத் "துவாபர மெண்ணூற்றறுபதாயிரத் தொன்பதி னூறெய்து சித்தார்த்தி யில் * * * * உதித்தே" எனும் பாயிரக்கூற்றா னறியலாம். இவ்விடயம் மேலைக் குருபரம் பரையினுமுண்டு. மேற் காட்டிய கூரேச விஜயச் செய்யுளுரையில் "அ௬௨௯0௧ என்று குருபரம்பராப்ரபாவ வசநத்திற் காணப்படு கின்றது" எனவு மெழுதப்பட்டுளது. இவ்வுரை குருபரம் பரையை ஒராறு விலக்கிக் கூரேச விஜயத்தையே யுறுதிப் படுத்துவதாகும். ஆயின், அ௬௪000-வருஷங் கொண்ட துவாபரயுகாந்தத்திற் பிறந்து பாரதயுத்த நடாத்தி வெற்றி யடைந்து ௩௫-வருஷஞ் செங்கோல் செலுத்திக் கலியுகாரம் பத்தில் உத்தரதிசை நோக்கிச் சென்று நற்கதியடைந்த தருமபுத்திரர் தம்பியான அருச்சுனராஜனால் உத்தரகிரியை விதிப்படி தகனஞ்செய்யப்பட்ட சரீர பூதராகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி முடிவு காலத்திற்கு ௩0௯௯-வருஷத்திற்கு முற்பட்ட காலத்தே அவ்வாழ்வாருள்ளவராகின்றார். குரு பரம்பரைப்படியாயின், அவர் ௪0௯அ-வருஷத்திற்கு முற் பட்டவராகின்றார். இப்படிப் பல்லாயிரக்கணக்கான புரட் டில் எப்படியாயினும், அவ்வாழ்வார் தம் பாடல்களில் அக் கிருஷ்ணமூர்த்தியின் செய்கைகளைச் செப்பித் துதிக்கமாட் டார். துதித்திருத்தலானே அம்மூர்த்தி முடிவுக்குப் பிற்

காலமே அவர் பிறந்தவராகவேண்டும். அன்று, அவ்வாழ்வார் நெடுங்கால மிருந்துளார் : கிருஷ்ணர் காலமு மதனுட்படும் : அதனாலவர் அவ்வாறு துதித்தா ரென்னின், அது பொருந்தாது. ஏனெனின், வைணவர் கூறுமாறு அங்ஙனம் பாஞ்சஜந்ய முதலிய அமிசராக முன்னர்ப் பிறந்துள்ள அந்தவாழ்வார்கள் பின்னர் பிறந்துள்ள தங்கணாயகனை கிருஷ்ணரைக் கண்டு பேசவும் அவருந்தமக்குமுன் அடியவரா யவதரித்த அவர்களைக் கண்டு பேசவும் வியாசரைக்கண்டு பேசவும் நேரிட்டு அவ்விவரம் வியாசரெழுதிய பாரதாதிகளிலும் வந்திருக்கவேண்டும்; அப்படி வராததனாலும், குருபரம்பரை யவ்வாறு கூறாததனாலும் கிருஷ்ணமூர்த்திக்குப் பின்னே திருவல்லிக்கேணியி லேற்பட்ட பார்த்தசாரதி கோவில் குறித்து "ஒரு வல்லித் தாமரையா ளொன்றியசீர் மார்பன் - திருவல்லிக்கேணியான் சென்று" என அப்பேயாழ்வார் பாடியிருப்பதனாலு மென்றோர்க. இன்னகாரணங்களால் கலியுகத்தில் திருவல்லிக்கேணியாலய மேற்பட்ட பின்னே பிறந்த ஆழ்வார், சுகர்பாகவதமென்பதிலுள்ள செய்திகளைக் கிரகித்துப் பாடினாரென்பதும், ஆழ்வார்களைத் தேவார திருவாசகப் பேராசிரியர்க்கு முற்பட்டவராய்த் துவாபர யுகத்தவராய் வைக்கவேண்டுமெனும் பேராசை யுள்ளவரால் அப்பிறப்பு வரையறை கற்பித்தெழுதப்பட்டதென்பதும், அப்படியே யப்புத்தகங்களிற் சில்வேறு சிறப்புக்களுமெழுதப்பட்டன வென்பதும் திறம்பாத்தீர்வையாகும். இதனை, மதுரைச் செந்தமிழ் சங்கத்துச் சோபகிருது வருஷத்துப் பத்திரிகைத் தொகுதி - உ, பகுதி - ௩-ல் "கர்ணபரம்பரைச் செய்திகளைக் கொண்டு எழுதப்பட்ட சில நூல்களில் ஆழ்வார்கட்குப் பின்வருமாறு காலநிர்ணயஞ் செய்யப்பட்டுள்ளன." "இங்கே காட்டிய காலவளவுகள், நவீனமுறையிற் சரிதவாராய்ச்சி செய்வார்க்குப் பின்னோர் அதிகமாகப் புனைந்த கற்பனைகளாகத் தோன்றுகின்றன" என்று மு. இராகவையங்கா ரென்பாராலெழுதப்பட்டதும் ஆதரிக்கின்றது. ஈண்டின்னுமொரு விசேஷங் கவனிக்கத்தக்கது. அதாவது:—

"நாமே போய் இவர்களை வாரிப் பிடியாகப் பிடித்துக்கொண்டு வரவேண்டுமென்று ராமக்ருஷ்ணாதி யவதாரமாக அவதரித்துப் படாதனபட்டுத் திருத்தப் பார்த்தவிடத்திலும்" என்று வருகிற விடத்திலே "விஸஜாதியான நமக்கு இது சாத்தியமன்றென்று * * * * மநுஷ்யஸஜாதியரான ஆழ்வார்களை" நாராயணரனுப்பினரென்றும், அவர்கள் நாராயணருடைய தேவி - ஆயுதம் - வாகனம் - ஆபரணம் முதலியவைகளும் நித்திய சூரிகளுமே யென்றும் அக் குருபரம்பராப்பிரபாவ அவதாரிகையி லெழுதப்பட்டுளதே. இவ்விடயம் :—ஸ்ரீநாராயணருக்குச் சருவஞ்ஞத்துவமுஞ் சருவ வல்லமையும் யாண்டுமில்லையென நனிகாட்டுவதோடு கிருஷ்ணருக்குப் பின்னர்த்தான் எல்லா ஆழ்வாரும் பிறந்தனரென்பதையு நிலைநாட்டுவதாயிற்று. "நாமேபோய்" என்பது முதலிய இவ்வவதாரிகை விடயமும், திருவாய்மொழி ஒன்றெனும்பத்தில் எல்லாரும் வீடு பேற்றை யடைந்துவிட்டால் உலகமில்லாதுபோமென்றே நாராயணவழிபாட்டிற்கு வேறான வழிபாடுகளை யுண்டு செய்தது, அந்நாராயணனுடைய மாயந்தானெனும் பொருள் தரு "போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டும்மையின்னே — தேற்றிவைத்த தெல்லீரும் வீடு பெற்றாலுலகில்லை யென்றே — சேற்றிற் செந்நெல் கமலமோங்குந் திருக்குருகூரதனுள் — ஆற்றவல்லவன் மாயங் கண்டீரதறிந்தறிந்தோடுமினே" (3111) எனுஞ் செய்யுளுமொன்றற்கொன்று நேர்விரோத மாதலுங் காண்க. இச்செய்யுளால் ஆழ்வார்களுலகைத் திருத்தவல்லவராக வந்தவரல்லரெனல் வியக்தம். இவையிற்றையன்றி மற்றொரு கேடும் வைணவத்திற்கு வேண்டுமா? இங்ஙனமாக சன்மார்க்க சைவசமய சாஸ்திரங்களை அக்குருபரம்பரையிற் "கள்ளப் பொய்ந்நூ" லென்றதற் கிணங்க இராமாநுஜ நூற்றந்தாதி ௬௬-ம் பாட்டில் "தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும்" எனுந்துராகிருத வசனமும் பிறநிந்தைகளும் பிறந்தமை பேராச்சரிய மல்லவா? இப்படிச் சைவ சாஸ்திர நிந்தை - சைவசமயநிந்தை - சிவசின்ன நிந்தை - சிவாலய

நிந்தை - சிவனடியார் நிந்தை - சிவாசாரிய நிந்தை-சிவசத்தி நிந்தை - சிவநிந்தை யென்பவற்றைச் செய்வனவாயும், முன் பின் முரணிக் கூறுவனவாயும், சொற்குணம் வாளா போமாறெழுதப்பட்டனவாயும், வேத முதலிய பிரமாணங் களை மீறுவனவாயும், உண்மையில்லாதனவாயும், சாதுக்கள் வெறுக்கத்தக்கனவாயு முள்ளவைகளே வைணவர் புத்தகங் களுஞ் செய்கைகளுமென்பதை யிம்மட்டில் விளக்கினோம்.

ஓ சத்திய சைவமரபிற் றோன்றிய தகையுடையீர்! இனியேனும் அவ்வைணவர் போதகங்களினின்றும் விலகுங் கள். இலிங்க புராண உத்தரகாண்டம் முகடி தோற்ற முரைத்த அத்தியாயத்தில் "என்றனு மிங்கெனை வணங்கி யீர்ஞ்சடை யண்ணலையுமையோ டிகழ்ந்துநாளு-மொன்றி யுறைவோர் பொருள்க ளொன்றறவே வவ்வி யவணுற்றே நின்று - மன்ற வருந்திடுதியான் மற்றவன் றனருளினு லன்றே வானி - னன்று மிக வாழ்கின்றே மலரோனும் யானுமென நவின்று போனான்" எனவரு பாட்டில், வாராய் மூதேவி! "என்னை மட்டும் வணங்கிச் சிவபிரானை யும் உமையவளையு மென்று மிகழ்ந்து திரிவோர் பொருள் களை நீ கவர்ந்தனுபவிக்கக் கடவாய்; பிரமனும் நானும் அந்தப் பிரானருளினாலன்றே விண்ணுலகில் வாழ்கின்றே மென்று நாராயணப் பெருமாள் நவின்றுசென்றார்" எனப் பொருளாவதையும், இலக்ஷங்கிரந்தங் கொண்ட மஹோதி காசமாகிய சிவரகசியம் ௩-வது அமிசம் மன்மதவதைச் சருக்கத்தில் "பரமனை நிந்தை செய்யும் பாவியைக் கண் ணுற்றாலுந் - திரமுறு பாவஞ் சேரு மதுதீரச் செய்யுஞ் சாந்தி - யுரமுறு நூறுபேதஞ் செய்யினு மொழிவுறாதா - லரனுறு பத்திபெற்றோ ரபராதன்றனைச் சேராரே" என வருவதையும் மார்க்கண்டேய புராணம் தரும பக்ஷி ஜைமினி சம்வாதம் கக-வது அத்தியாயத்தில் "தெய்வநிந்தை" நர கத்தினின்றும் வந்தவர்களுக் கடையாளமாகக் கூறப்பட் டிருக்கிற தென்பதையும், மேற்படி கo-வது அத்தியாயத் தில் "கெடுதியானவற்றைப் பிறருக்கு வலிந்து போதிப் போனும், வேதத்தைப் பழுது கூறுவோனுமாகிய இவ

ரனைவரும் மரணகாலத்தில் மயக்கத்தோடொழிவர்" என வருவதையும், சிவநிந்தகர் அனேக நோய் முதலியவற்றால் வருந்துவ ரென்று வைணவபுராணமாகிய நாரதீயபுராணம் நவில்வதையும், அப்படி வருந்தினவர் பல்லோருள்ளுஞ் சிவாலயத்தைக் கண்டபோதுஞ் சிவனடியாரைக் கண்ட போதுங் கண்களை மூடிக் கண்கெட்டலைந்தவரனேக ரென்பது இக்காலத்தும் பிரத்தியக்ஷ மென்பதையு முணர்மின். வேளாளமரபிற் றோன்றி வைணவராயிருப்பவர்கள் தம்மையறியாதாரிருப்பிட மெய்தித் தாகத்திற்குத் தண்ணீர் கேட்டால் அவர் நீயிர் யாவரென்று வினவ நேரிடும். அங்ஙனம் நாங்கள் வைணவர் என்றக்கால், அவர் இவர்கள் வடுகரோ? இடையரோ? தாதரோ? சாத்தானியரோ? ரெட்டிகளோ? எறியிறங்குந் திருமேனிகளோ? எங்குங் கண்ட திருமேனிகளோ? தீண்டாத் திருமேனிகளோ? மற்றெவர்களோ? என்றையுற்று நிற்க நேரிடுமன்றோ. பின்பு அஃதுணர்ந்து நாங்கள் வேளாள ரென்னினும் பெயர்த்தும் நீவிர் புலாலுண்பவர்களோ? எனவும் வினவ நேரிடுமன்றோ? அங்ஙனம் சைவர் என்றக் கால் அம்மட்டில் தொன்றுதொட்டுவரு வழக்குப்படி இவர்கள் வேளாளர் புலாலருந்தாப் புனிதர் பரமனடியவரென அவருணர்ந்து கொள்வாரன்றோ? இவ்வளவு மேன்மைத் தான சைவசப்தந் தாங்கிச் சைவரா யிருக்கத்தக்க நீங்கள் வைணவராக வெண்ணல் இகத்தும் இழிவா மென்பதை யுணர்ந்து, இலிங்கபுராண உத்தரகாண்டம் அ-வது அத்தியாயத்தில் "வைதிக சைவத்தின் வழி நின்ற வல்லோர்" என்றற்கியைய நுங்கள் சொந்த மதமான வைதிக சைவ நெறி நின்றுய்யுங்கள்! இன்னுமிந்நூற்கண் விளக்குவன வற்றையுங் கவனியுங்கள்!

சிவாகமம் உஅ-இனுஞ்சேராத வேதபாகியமான சோமலாகுள பைரவாதி யாகமங்களிற் சொல்லப் படுபவை சவபஸ்ம நராஸ்தி கபாலதாரணமும், கபாலபாத்திரமும், சுராபானாதிகளுமாம். இவைகளிலுள்ள பஸ்மத்தை வைதிகர் தீண்டொண்ணாது அதனையணிபவரைக் காணினுங்

தோஷமென்று தரும சாஸ்திரங்களிற் சாற்றியிருக்க, அச் சொற்களுக்கு வைதிகத் திருநீற்றையே யருத்தம் பண்ணிய சிவத்துவேஷ வைணவரையும் அவர் புத்தகங்களையும் எந்த வைதிகசீலர் நன்கு மதிப்பார்? சுருதிக்கும் ஸ்மிருதிக்கும் விரோதமுண்டாகில் ஸ்மிருதியைத் தள்ளிச் சுருதியைக் கொள்ளவேண்டிய தென்று மீமாம்ஸா சாஸ்திரம் விதித் ததை யவரறியாததுதா னென்னே? புண்ணியநதி பலவற் றுள்ளுஞ் சிறந்து விளங்கா நின்ற கங்கையின் மூழ்கும் பாக்கியமிழந்து "சடைச்சாறு" என்று அதனை யிகழ்ந்து திரியும் அன்னவர், உடற்பிணியையும் மலப்பிணியையு நீற்றி யருளு நீற்றையு மிகழ்ந்துழிதால் ஓரதிசயமன்றே. இது கிடக்க. முகம்மதியரும் வேறு சிலரும் பிசா சோட்டவும் பிணி தீர்க்கவும் அத்திருநீற்றினைக் கொள்வதுபோலத் திரு மண்ணைக் கொள்வதுண்டா? இல்லையே. இப்படி யநுபவ சித்தமான அந்நீறணிதல் வேதத்திலுள்ளதாமென வொப் புக்கொண்ட சில வைணவர், அது பிராயச் சித்தாங்கமென் றும், ஓமாங்கமென்றும், சிவனடியாரே யணிவதென்றும் ஒருவகையாகக் கூறுவர். அங்ஙனமாயின், உலகரெவரும் பாவப் பிராயச்சித்தஞ் செய்யவேண்டியவர்களே யாத லால் அனைவருமணியலா மென்பதூஉம், விஷ்ணு முதலினோரும் அதுபற்றியே யணிந்தா ரென்பதூஉம், அவரும் சிவனடியா ரென்பதூஉம், ஓமம் அஃ தணியாமற் செய்யொண்ணா தென்பதூஉம் உறுதிப்படு மாலோ. அதனாற் பஸ்மதூஷண வைணவர் வைதிக கர்ம மான ஓமத்தையு மொழித்தவராவரே. இது முதலிய கார ணங்களாலன்றோ வைணவத்தைப் புறச்சமய மென்பதும் பழுதறு வழக்காயிற்று. சாதாதபஸ்மிருதியில் (த்ரிபுண்ட்ரேந விநாஸந்த்யா த்ரிபுண்ட்ரேந விநாஜப:| த்ரிபுண்ரேந விநாஸ்ராத் தம்ராக்ஷஸம் பரிகீர்த்திதம்||) "திரிபுண்டரதாரணமின்றிச் செய்யும் ஸந்தியாவந்தனமும், ஜபமும், சிராத்தமும் ஆகிய இவற்றின் பலனை இராக்ஷதர்கள் அபகரிப்பார்கள்" என வருதற்கும், (ஸத்யம்சௌசம்தபோஹோமஸ்தீர்த்தந்தேவாதி பூஜநம்| தஸ்யவ்யர்த்தமிதம்ஸர்வம்யஸ்த்ரிபுண்ட்ரம்நதார

யேத்||) "எவன் திரிபுண்டரமணியவில்லையோ அவனுடைய ஆசாரம் சத்தியம் தவம் ஓமம் புண்ணியதீர்த்தஸ்நாநம்தேவ பூஜையெல்லாம் நிஷ்பலமாகமுடியும்" என வருவதற்கும், காத்தியாயநஸ்மிருதியில் (த்ரிபுண்ட்ரம்யத்யத்ருத்வா துகுர்யாத்யத்கர்மதத்வ்ருதா) "திரிபுண்டரந்தரித்துக் கொள்ளாமல் எக்கிரியையையெவர்செய்கின்றாரோ அஃது வீணேயாகும்" எனவருதற்கும் அவ்விலக்குக் கூறும் வைணவரென்செய்வாரோ? செயற்பாலதில்லையாகலின், விபூதிதாரணம் சுரௌதமார்க்கமுஞ்சிமார்த்த மார்க்கமு மென்றுகொண்டு நித்திய நைமித்திக கர்மங்களில் அநுஷ்டிக்கத்தக்கதேயாகும். இந்தப் பஸ்மதாரணத்தை உலகை வெறுத்து மோக்ஷமேபொருளென நிற்குஞ் சன்னியாசியுந் தள்ளொணுதென்பதற்குப் பஸ்மஜாபாலோபநிஷத்தில் "யதிர்பஸ்மதாரணம் த்யக்த்வா ஏகதா உபோஷ்யத்வாதஶஸஹஸ்ரப்ரணவஞ்ஜபத்வாஶுத்தோபவதி|" எனவருவது "சன்னியாசியும்ஒருவேளை பஸ்மதாரணஞ் செய்துகொள்ளத் தவறுவனேல் உபவாசமிருந்து பிரணவஜபம் பன்னீராயிரத்தால் அப்பாவ நீங்கிப் பரிசுத்தனுவன்" எனுமருத்தந் தருதல் காண்க. இத்திற மேம்பாடுடைய விபூதியை மதியாத வைணவ ருளொருவர் சென்னையிலுள்ள ஒரு விநாயகர் சன்னிதியி லளித்த திருநீற்றைத் தமது கையில் வாங்கி அதை யாசனப்புறத்தில் தேய்த்துவிட்டுத் தம்வீடு சென்றவுடன் அத்தேய்ப்புண்டவிடத்தில் எப்படிப்பட்ட வைத்தியராலுங் குணப்படாத ஒரு பெருங்கட்டி கிளம்பி அதனால் மிகவும் வருந்தும்போது இது வந்தகாரணம் தமது அடாச் செய்கையேயாமெனத் தெளிந்து அன்றே யவ்விநாயக மூர்த்திக் கபிடேகஞ் செய்யும்படி செய்வித்து அக்கோவில் விபூதி தருவித்தணிந்தவுடன் சுகப்பட்டவிவரம் அச்சென்னை வைத்தியநாத முதலியார் வீதியில் விஷ்ணு பக்தராயுள்ள அரங்கநாத முதலியாரிடம் இன்றுங் கேட்டறியலாமே. இவ்வாறு மாந்தர் பலருந் தன்புழக்கவும் இன்பிழக்கவுங் காரணமாயுள்ளவை அந்த அநியாய வைணவர் அஸ்தலிகிதங்களே யாகும். பார்த்தமட்டில் தனித்திரு நீறணிமேனி தவத்தழகாகப் பிரகா

(தொடரும்)